


# புது நம்பிக்கை

பெறுவோம்! கொடுப்போம்!!

தனி பிரதி.ரூ. 10/-

மலர் – 2 அக்டோபர் – டிசம்பர் – 2013 இதழ் – 4

**இன்று கர்த்தராகிய கிறிஸ்து என்னும் இரட்சகர் உங்களுக்குத் தாவீதின் ஊரிலே பிறந்திருக்கிறார்**

(லூக்கா 2:11)

# தொழுநோயாளிகளின் குழந்தைகள் இல்லம்

ஆந்திர மாநிலத்தில் இந்த இல்லம் 34 குழந்தைகளுடன் செயல்பட்டு வருகிறது. இவர்களின் பெற்றோர் தொழுநோயாளிகள் ஆனபடியினால் அவர்களால் வேலை செய்து இக்குழந்தைகளின் அடிப்படை தேவைகளான உணவு மற்றும் உடை போன்றவைகளை சந்திக்க இயலவில்லை. பள்ளிச் செல்லும் நாட்களில் மட்டும் இக்குழந்தைகளுக்கு பள்ளியில் மதிய உணவு வழங்கப்படுகிறது. ஆகவே இக்குழந்தைகள் காலையிலும் இரவிலும் உணவு கிடைக்காமல் பசியால் அல்லல் படுகின்றனர். இக்குழந்தைகளின் பரிதாப நிலையைக் கண்ட இக்கிராம மிஷனெரி மற்றும் சபையார் இக்குழந்தைகளுக்கு காலையிலும் இரவிலும் தங்களால் இயன்ற அளவு உணவு சமைத்து கொடுத்து உதவுகின்றனர். இருப்பினும் இந்த ஏழை சபையால் குழந்தைகளுக்கனா உணவு தேவைகளை தினமும் சந்திக்க இயலாமல் சிரமப்படுகின்றனர். இந்த ஏழை குழந்தைகளுக்காக உதவும் இந்த சபையுடன் இணைந்து நீங்களும் உதவலாம். இக்குழந்தைகளுக்காய் உங்கள் தனி, குழு, சபை மற்றும் குடும்ப ஜெபங்களில் ஜெபிக்க அன்புடன் வேண்டுகிறோம்.

ஒரு குழந்தைக்கான மாத உணவு தேவை ரூ. 500/-

இக்குழந்தைகளை சந்திக்க மற்றும் உதவ விரும்புபவர்கள் தொடர்பு கொள்ளவேண்டிய எண்: 9443155120



# மிஷனரிகளுக்கு மருத்துவ உதவி செய்தல்



மிஷனரி பணிக்களங்களில் பணியாற்றும் பணியாளர்கள் தேவ ராஜ்யத்தின் மகிமையான பணியை செய்து வருகின்றனர். அவ்வாறு பணியாற்றும்போது மிஷனரிகள் சந்திக்கும் இன்னல்கள், இடர்பாடுகள் ஏராளம் ஏராளம். இத்தனை இடர்களுடன் சில மிஷனரிகள் உடல் ஆரோக்கியம் சார்ந்த பல்வேறு நோய் நொடிகளுக்கு ஆளாகின்றனர். அவ்வித நோய்கள் தாக்கும்போது சில மிஷனரிகள் உரிய சிகிட்சைக்கான நிதி வசதியின்றி தவித்து வருகின்றனர்.

இவ்வித இக்கட்டான வேளைகளில் மிஷனரிகளின் சிறந்த மருத்துவ சிகிட்சைக்கு புதுநம்பிக்கை மிஷன் உதவி செய்து வருகிறது. ஏழை மிஷனரிகள் மருத்துவ சிகிட்சைக்கு கருத்துடன் ஜெபிப்போம். உதவ முன்வருவோம்.

மேலும் விபரங்களுக்கு தொடர்பு கொள்ள: 9442935233

Address:-
Newhope Mission
75/33, Isaac Street,
Nagercoil - 629001

# புது நம்பிக்கை

பெறுவோம்! கொடுப்போம்!!

மலர் - 2 அக்டோபர் -டிசம்பர் - 2018 இதழ் - 4

## உள்ளே . . .



ஆசிரியர்

S. மோசஸ் ராஜ் – 7502071054

ஆசிரியர் குழு

S. வசந்த நேசம் – 9789183072

D.V. பிபின் சஜீவ் – 9443018392

A. சுதா ஏசாயா – 9486083188

நிர்வாக குழு

ஆ. ரவி குமார் – 9442935233

Rev. D. இன்பராஜ் ஜாண்சன்

திரு. ஜாண் பெர்க்மென்

C. பால் பென்னட் சிங் –9442315 5120

முகவரி :

**புது நம்பிக்கை**

75/33, ஐசக் தெரு,

நாகர்கோவில் – 629 001

தனி பிரதி. 10/–

ஆண்டு சந்தா. 100/–

ஆயுள் சந்தா. 2000/–

தனி சுற்றுக்கு மட்டும்

**இயக்குநர் மடல்!**

*கிறிஸ்துவுக்குள் அன்பானவர்களே!*

இயேசு கிறிஸ்துவின் இனிய நாமத்தில் அன்பின் வாழ்த்துக்கள்.

தேவனுடைய பெரிதான கிருபையாலும், உங்கள் அனைவரின் ஜெபத்தாலும் நமது ஊழியங்கள் தொடர்ந்து வளர்ந்து வருகிறது.

ஆந்திர மாநிலத்தில் கட்டப்பட்டு வந்த சபை பணிகள் மழை, மற்றும் நிதி போன்ற காரணங்களால் தடைபட்டிருந்த நிலை மாறி மீண்டும் கட்டுமான பணிகள் தொடங்கியுள்ளன. இப்பணிகள் இனி தடையின்றி தொடர ஜெபித்துக்கொள்ளுங்கள். மத்திய பிரதேசத்தில் புதிய பணிக்களத்தில் சபை கட்டுமான பணி தொடங்க திட்டமிடப்பட்டுள்ளது. இதற்காக ஜெபித்துக்கொள்ளுங்கள். அத்துடன் மிஷனெரி பயிற்சிக்காக இறையியல் படிப்பவர்க்கும் உதவிகள் வழங்கப்பட்டன.

நமது ஊழியத்தை பல சபைகளில் அறிமுகப்படுத்தி, தேவ செய்தி கொடுக்கவும் தேவன் கிருபை செய்தார்.

**14–7–18** அன்று நாகர்கோவில் ஹோம் சர்ச் மூத்த குடிமக்கள் ஐக்கியத்தில் கலந்துகொண்டு ‘முதுமையை எதிர்கொள்ளுதல்’ என்ற தலைப்பில் தேவ செய்தி கொடுக்க கர்த்தர் கிருபை செய்தார்.

இந்த ஆண்டு முழுவதும் நம்மோடு இருந்து வழிநடத்தி வந்த இம்மானுவேல் இயேசு கிறிஸ்து வரும் **2019** ஆம் ஆண்டிலும் நம்முடன் இருந்து நம்மை காத்து நடத்துவாராக!

இப்படிக்கு கிறிஸ்துவின் பணியில்,

**சகோ. ஆ. ரவி குமார்**
இயக்குநர்

# வெற்றியின் பிறப்பு!

இயேசு கிறிஸ்துவின் பிறப்பை இந்த நாட்களில் நாம் கொண்டாடுகின்றோம். சில வேளை சிலர் இயேசு கிறிஸ்து டிசம்பர் 25–ஆம் தேதி தான் பிறந்தாரா ? என கேட்பதுண்டு. வரலாற்று ரீதியாக அவர் பிறந்த நாளை சரியாக கூறுவது கடினமாக தோன்றலாம். ஆனால் அவர் பிறந்தார் என்பது சரித்திர உண்மை. அப்படியானால் அவர் எந்த நாளில் பிறந்தார் ? தெரியவில்லை என்பதை விட; டிசம்பர் 25 பிறந்திருக்கவும் வாய்ப்புண்டு என கருதுவது சரியானதே. ஆகவே எந்த நாளில் பிறந்தார் என வீணாக விவாதிப்பதை விட கிறிஸ்தவர்களாகிய நாம் அவர் பிறந்த நோக்கத்தை குறித்து தியானிப்பதே நமக்கு அதிக பயனுடையதாக இருக்கும்.

**1. பாவத்திலிருந்து மீட்க பிறந்தார்! (மத்.1:21)**

அவள் ஒரு குமாரனைப் பெறுவாள், அவருக்கு இயேசு என்று பேரிடுவாயாக; ஏனெனில் அவர் தமது ஜனங்களின் பாவங்களை நீக்கி அவர்களை இரட்சிப்பார் என்றான்'' – இந்த வசனம் இயேசு கிறிஸ்து பிறந்த பிரதான நோக்கத்தை தெளிவுபடுத்துகிறது. இயேசு பிறந்த பிரதான நோக்கம் மனிதரை பாவத்திலிருந்து இரட்சிப்பது ஆகும்.

தேவன் ஆறு நாட்களில் உலகம் மற்றும் மனிதனை படைத்தார். மனிதன் எவ்வாறு வாழ வேண்டும் என்ற கட்டளையை கொடுத்தார். ஆனால் முதல் மனிதன் ஆதாம் அந்த தேவ கட்டளைக்கு கீழ்ப்படியவில்லை. அவனது கீழ்ப்படியாமை பாவம் என கருதப்பட்டது. அதுமட்டுமல்ல அவனது சந்ததியான மனுக்குலம் முழுவதும் பாவத்துக்குள் சென்றது. (ரோ.5:12). ஆகவே வசனம் கூறுகிறது ''எல்லாரும் பாவஞ்செய்து தேவ மகிமையற்றவர்களாகி போனார்கள்'' (ரோ.3:23) பாவஞ்செய்த மனிதன் நரக தண்டனைக்கு பாத்திரனாயிருக்கிறான். தேவன் கிருபையினால் மனிதரை மீட்கும்படி உலகத்தில் இயேசுவை அனுப்பினார். அவரை விசுவாசிக்கிறவர்களுக்கு மீட்பு உண்டு. இயேசுவால் மீட்கப்பட்டவர்கள் தேவனுடைய பிள்ளைகளாக மாறுகிறார்கள். (யோ.1:12)

**2. பயத்திலிருந்து விடுவிக்கும்படி பிறந்தார்!** (எபி.2:15)

ஜீவகாலமெல்லாம் மரண பயத்தினாலே அடிமைத்தனத்திற்குள்ளானவர்கள் யாவரையும் விடுதலை பண்ணும்படிக்கும் அப்படியானார்.

ஆதாம் தேவனுக்கு கீழ்ப்படியாமல் பாவம்செய்தபோது, அவன் பாவம் செய்தான். அதன் விளைவாக அவனை பயமும் பிடித்துக்கொண்டது. (ஆதி.3:10) மனிதனுக்குள்ளாக மரண பயம் இருப்பது மனிதன் பாவி என்பதற்கு ஒரு வலுவான உளவியல் சான்று. ஒவ்வொரு மனிதனும் தன் வாழ்வில் ஒரு முறையாவது மரண பயத்தை சந்திக்கிறான் என்பதை எவரும்

மறுக்கவோ, மறைக்கவோ இயலாது. இவ்வித மரண பயத்திலுப்பவர்களை விடுவிப்பது எவ்வாறு? இயேசு கிறிஸ்துவால் மட்டுமே மனிதனை மரண பயத்திலிருந்து விடுவிக்க முடியும். அவரே மரணத்தை ஜெயித்தவர். அவரே மனிதனின் மரண பயத்தை போக்க முடியும்.

**3. பரலோகில் சேர்க்கப் பிறந்தார்!** (யோ 6:37)

பாவத்தின் சம்பளம் மரணம். மரணம் என்ற சொல்லுக்கு பிரிவு என ஒரு பொருளும் உண்டு. அதாவது ஆதாம் பாவம் செய்தபடியால், அவன் தேவனிடமிருந்து நிரந்தரமாக பிரிக்கப்பட்டான். ஓடி ஒளிந்தான். அது போலவே அவனது சந்ததியினரான மனுக்குலமும் தேவனை விட்டு விலகி தூரமாக சென்று விட்டனர். தேவனை தேடுகிறவன் இல்லை. ஆனாலும் மனிதர் மீது அன்பு வைத்து, விசுவாசிக்கிறவர்களுக்கு நித்திய ஜீவனை அளிக்கும்படி பிறந்தார்.'' தேவன், தம்முடைய ஒரே பேறான குமாரனை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் கெட்டுப்போகாமல் நித்திய ஜீவனை அடையும்படிக்கு அவரைத் தந்தருளி, இவ்வளவாய் உலகத்தில் அன்பு கூர்ந்தார். (யோ.3:16) இயேசுவின் பிறப்பு முலம் மனிதன் நித்திய ஜீவன் அடையும் வழி உண்டானது. மேலும் பிதாவானவர் எனக்குக் கொடுக்கிற யாவும் என்னிடத்தில் வரும். என்னிடத்தில் வருகிறவனை நான் புறம்பே தள்ளுவதில்லை'' என்கிறார் (யோ.6:37) அவர் மீதுள்ள விசுவாசத்தால் நாம் பரலோகம் செல்ல முடியும்.

**4. பாரினில் வெற்றி தர பிறந்தார்!** (யோ 16:33)

என்னிடத்தில் உங்களுக்கு சமாதானம் உண்டாயிருக்கும் பொருட்டு இவைகளை உங்களுக்கு சொன்னேன். உலகத்தில் உங்களுக்கு உபத்திரவம் உண்டு. ஆனாலும் திடன் கொள்ளுங்கள்; நான் உலகத்தை ஜெயித்தேன் என்றார். (யோ. 16:33) உலகில் மனிதன் பிறந்து விட்டால் பிரச்சனைகளை சந்திப்பதை தவிர்க்க முடியாது. பிரச்சனைகள் தொடர்ந்து வரலாம். ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து கூட, அவர் பிறந்த நாள் முதல் பரமேறி சென்ற நாள்வரை பிரச்சனைகளை தொடர்ந்து சந்தித்தார். ஆனால் ஒருபோதும் சோர்ந்து போகவில்லை. இறுதியில் மரணத்தை வென்று உலகத்தை ஜெயித்து பரமேறினார்.

அவர் நமது பிரச்சனைகளில் நமக்கு வெற்றி தருவார். ''வெற்றி பெற்றவருடன் இருப்பது உங்களை வெற்றியாளராக மாற்றும்'' (Benig with a winner, makes you a winner) என்பது பிரசித்தி பெற்ற வாக்கியம். உலகத்தை ஜெயித்த இயேசு கிறிஸ்துவுடன் நாம் இருந்தால் நாமும் வெற்றியாளராக மாறுவோம்.

இந்த பண்டிகை காலம் தொடங்கி வருகிற ஆண்டுகள் உங்கள் வாழ்வில் தொடர் வெற்றிகளை தர தேவன் சித்தமுள்ளவராயிருக்கிறார்! நீங்கள் அவருடன் இருக்கிறீர்களா!! அவரை விசுவாசிக்கிறீர்களா!!!

**H.R.K.**

# இயேசு கிறிஸ்துவின் கன்னிப் பிறப்பு

பிதா, குமாரன், பரிசுத்த ஆவியானவராகிய திரியேக தேவனுக்கு, இன்றும் என்றும் உள்ள சதாகாலங்களிலும் மகிமை உண்டாவதாக. அவராலே உங்களுக்கு கிருபையும் சமாதானமும் உண்டாவதாக. நாம் கடந்த இதழிலே பைபிளின் அஸ்திபார போதனைகளில் ஒன்றாகிய திரித்துவத்தைப் பற்றி பார்த்தோம். இந்த இதழிலே இயேசு கிறிஸ்துவின் கன்னிப் பிறப்பைக் குறித்து தியானிப்போம்.

இயேசு கிறிஸ்துவின் கன்னிப் பிறப்பு என்பது குமாரனாகிய தேவன் புருஷ சித்தமில்லாமல் ஸ்திரீயினிடத்தில் மனுஷனாக பிறந்ததைக் குறிப்பதாகும். தேவன் மாம்சத்தில் வெளிப்பட்டார். (1 தீமோ.3:16) இது குறித்த விரிவான படிப்பினையை (பார்க்க புதுநம்பிக்கை மலர்–1 இதழ் 4 அக்டோபர்–டிசம்பர், 2017, பக்கங்கள் 8–11) அவர் மாம்சத்தில் வெளிப்படுதல் கன்னிப்பிறப்பின் மூலமாய் நிறைவேற்றி இவ்வுலகத்திற்கு வந்தார். பைபிளில் காணப்படும் இயற்கைக்கு அப்பாற்பட்ட அற்புதங்களில் இது முக்கியமானதொன்றாகும். பைபிள் இதற்கு சாட்சியிடுகிறது. மட்டுமல்ல, சபைச் சரித்திரம் முழுவதிலும் இது விசுவாசிக்கப்பட்டு வருகிறது. (உதா. அப்போஸ்தல விசுவாச அறிக்கை) ஆனால், இன்று சிலரால் இயேசுவின் கன்னிப்பிறப்புக்கு எதிரான பொய்யான செய்திகள் பரப்பப்படுவதால் (உதா. டாவின்சி கோட்) இதைக் குறித்த சரியான தெளிவு ஒவ்வொரு கிறிஸ்தவனுக்கும் உண்டாயிருப்பது காலத்தின் கட்டாயமாகும்.

## 01. இயேசு கிறிஸ்துவின் கன்னிப்பிறப்பு – பழைய ஏற்பாட்டில்

குமாரனாகிய தேவன் கன்னிப்பிறப்பின் மூலமாக மாமிச வெளிப்பாட்டை நிறைவேற்ற வேண்டும் என்பது ஏதோ திடீரென்று தேவனுடைய மனதிலே தோன்றி நிறைவேறினது அல்ல. பைபிளின் முதல் பகுதியாகிய பழைய ஏற்பாட்டிலேயே இதற்கான முன்னறிவிப்புகள் காணப்படுகின்றன.

### 1.1. ஆதியாகமம் 3:15

இந்த வாக்கியத்தில் இயேசு கிறிஸ்துவின் கன்னிப் பிறப்பைக் குறித்த முதல் முன்னறிவிப்பு கொடுக்கப்பட்டது. ஸ்திரீயின் வித்தாக வரக்கூடிய மேசியா சாத்தானை முறியடிப்பார் எனக் கூறப்பட்டுள்ளது. இது இயேசுவில் நிறைவேறியது. இங்கே ‘‘ஸ்திரீயின் வித்து’’ என்கிற பதம் கன்னிப்பிறப்பைச் சாட்சியிடுகிறது.

### 1.2. ஏசாயா 7:14

இந்த வாக்கியமானது இயேசுவின் பிறப்புக்கு எழுநூறு ஆண்டுகளுக்கு முன்னர் கூறப்பட்டதாகும். "இதோ! ஒரு கன்னிகை கர்ப்பவதியாகி ஒரு குமாரனைப் பெறுவாள்" என்கிற முன்னடையாளமானது ஆகாஸ் என்கிற யூதாவின் ராஜாவுக்கும் இஸ்ரவேலர் அனைவருக்கும் கொடுக்கப்பட்டது. இங்கே கன்னிகை என்பதற்கு அல்மா (Almah) என்கிற பதம் பயன்படுத்தப்பட்டுள்ளது. அல்மா என்பதற்கு இளம் பெண் மற்றும் கன்னிப்பெண் என்கிற இரு அர்த்தங்கள் உண்டு. ஆனால் வாக்கியத்தில் சூழவமையியலே (Context) இதில் எது என்பதை முடிவு செய்யும். மட்டுமல்ல, எபிரேயத்தில் கன்னி என்பதற்கு அல்மா தவிர வேறு பதம் கிடையாது. இங்கே பிறக்கக் கூடியவர் இம்மானுவேல் என்று பெயரிடப்படுவார். இம்மானுவேல் என்பதற்கு தேவன் நம்மோடிருக்கிறார் என்று அர்த்தம். (மத்.1:23) மத்தேயு தனது சுவிசேஷத்தின் 1:1–23ல் தேவ ஆவியானவரின் ஏவுதலினால், எசாயா 7:14 இயேசுவின் கன்னிப் பிறப்பில் நிறைவேறிற்று என பதிவு செய்திருக்கிறார்.

மட்டுமல்ல, பழைய ஏற்பாடு கிரேக்க மொழியில் கி.மு. இரண்டாம் நூற்றாண்டில் மொழி பெயர்க்கப்பட்டபோது (Septuagint) ஏசாயா 7:14ன் அல்மா என்கிற பதத்திற்கு பார்த்தனோஸ் (Parthenos) என்ற கிரேக்க பதம் பயன்படுத்தப்பட்டுள்ளது. அதற்கு கன்னிப் பெண் என்கிற ஒரே அர்த்தம் கொண்டதாகும். ஆகையால் இதன்மூலம் யூதர்கள் கி.மு. இரண்டாம் நூற்றாண்டில் இவ்வாக்கியத்தின் எதிர்கால நிறைவேறுதலுக்காக காத்திருந்தது புலனாகிறது.

இவைகளோடு ஒப்பிட்டு பார்க்க ஆதி. 3:15; ஏசா. 9:6

## 02. இயேசு கிறிஸ்துவின் கன்னிப்பிறப்பு – புதிய ஏற்பாட்டில்

புதிய ஏற்பாட்டில் மத். 1:18–25மற்றும் லூக். 1:26–37; 2:1–11,21ல் இயேசுவின் கன்னிப்பிறப்பு குறித்த செய்திகள் விபரமாக கூறப்பட்டுள்ளது. மத்.1:16 மற்றும் லூக். 3:23ன் படி மாம்சத்தின் படி இயேசுவுக்கு தகப்பன் இல்லை என்றும், இயேசு யோசேப்பின் குமாரன் என்று எண்ணப்பட்டார் (as was supposed) என அறிகிறோம்.

மேற்கூறிய வாக்கியங்களின் அடிப்படையில், இவையனைத்தும் திரியேக தேவனின் திட்டத்தின் அடிப்படையில் (எபி.10:5–7; சங். 40:6–8) பரிசுத்த ஆவியானவரின் செயலினால் நிறைவேறியது. (மத்.1:20; லூக்.1:35) இதை நிறைவேற்றுவதற்கு மரியாளை தேவன் பாத்திரமாக பயன்படுத்தினார்.

மாற்கு மற்றும் யோவான் சுவிசேஷங்களில் இயேசு கிறிஸ்துவின் கன்னிப்பிறப்பைக் குறித்த நேரடியான வசனங்கள்

காணப்படாவிட்டாலும், அது உண்மையே என்று அங்கீகரிக்கக்கூடிய வசனப்பகுதிகள் உண்டு.

மாற்கு 1:1ஐ லூக். 1:35 தோடு ஒப்பிடுக

யோவான்1:14 (கிரேக்கு) ஐ யோவான் 19:25–27 ஒப்பிடுக

அப்போஸ்தலனாகிய பவுலும் இயேசுவின் கன்னிப்பிறப்பை விசுவாசித்தார். கலாத்தியர் 4:5ல் இயேசு கிறிஸ்து காலம் நிறைவேறினபோது ஸ்திரீயினிடத்தில் பிறந்தார் என குறிப்பிடுகிறார். இங்கே ஸ்திரீயினிடத்தில் பிறந்தார் என்பது இயேசுவின் கன்னிப்பிறப்பை குறிப்பதாகும். (பார்க்க ரோமர் 1:4–5; பிலிப்.2:6–11)

## 03. இயேசு கிறிஸ்துவின் கன்னிப்பிறப்பைக் குறித்த அவரின் சாட்சி

இயேசு கிறிஸ்து தனது தனித்தன்மை வாய்ந்த கன்னிப்பிறப்பை ஆதியிலிருந்தே அறிந்திருந்தார். (லூக்.2:48,49) மட்டுமல்ல இதை பிரகடனப்படுத்தினார். (யோ. 6:38,46,51) யோவான் எட்டாம் அதிகாரமானது இயேசுவின் கன்னிப்பிறப்புக்கு எதிரான யூதர்களின் குற்றச்சாட்டுகளையும், அதற்கு இயேசு கொடுக்கும் மறுப்பினையும் விரிவாக காட்டுகிறது. இயேசு தனது மாம்ச வெளிப்பாடு பரத்திலிருந்து உண்டானது, தாழ்விலிருந்து உண்டானதல்ல என சாட்சியிடுகிறார் (யோ.8:23) இதை எதிர்க்கிறவர்கள் இயேசுவையும் பிதாவையும் கனவீனம் பண்ணுகிறார்கள் (யோ.8:49)

## 04. இயேசு கிறிஸ்துவின் கன்னிப்பிறப்பின் காரணங்கள்

i) தீர்க்கதரிசனம் நிறைவேற (யோவான் 5:39)
ii) தேவனுடைய வல்லமையை வெளிப்படுத்த (லூக்.1:37)
iii) தேவனுடைய செயலை வெளிப்படுத்த (மத்.1:21; லூக்.1:31)
iv) தேவனுடைய மீட்பை வெளிப்படுத்த
v) தேவனுடைய அன்பை வெளிப்படுத்த (யோ. 3:16–17)
vi) தேவத்துவத்தின் பரிபூரணம் சரீரத்தில் வாசமாயிருக்க (கொலோ.2:9)
vii) சாபத்தையும் மீறி தாவீதின் சிங்காசனத்தை சுதந்தரிக்க (அப்.2:30 ஒப்பிடுக எரேமியா 22:29–30)

## 05. இயேசு கிறிஸ்துவின் கன்னிப்பிறப்பின் ஆதாரங்கள்

இயேசு கிறிஸ்துவின் கன்னிப்பிறப்பு பெருவாரியான ஜனங்களால் ஏற்றுக்கொள்ளப்படுகிற சத்தியமாகும். ஆனால் சிலர் எந்த முகாந்திரமும் இல்லாமல் இந்த சத்தியத்தை எதிர்க்கின்றனர். தேவனுடைய செயல்கள் மனுஷனுடைய அறிவுக்கு அப்பாற்பட்டவை. அவைகளை மனுஷனுடைய பகுத்தறிவு (Rationalism) மற்றும் அனுபவம் (Empiricism) ஆகியவற்றினுள் அடக்கிவிட முடியாது

என்பதை நாம் அறிய வேண்டும். பைபிள் பண்டிதர்கள் இயேசுவின் கன்னிப்பிறப்பிற்கான பல ஆதாரங்களை முன்வைக்கின்றனர். அவற்றுள் சகோதரர் ஆ. ரவிகுமார் அவர்கள் எழுதிய "சபை உடைதலை தடுக்கும் வழிகள் புத்தகத்தின் (2014 பதிப்பு பக்கங்கள் 15–22)ல் இருந்து சில ஆதாரங்களை மட்டும் தருகிறேன்.

அறிவியல் தனது நிலைப்பாட்டை மாற்றிக்கொண்டே இருக்கும் (உதா.) புளூட்டோ கிரகமா இல்லையா என்ற விஞ்ஞானிகளின் குழப்பம்

நுண்ணுயிர்களின் இனப்பெருக்கம் – ஒரு செல் உயிரிகள்

சில தாவரங்கள், சில கடல்வாழ் உயிரினங்கள்

**பைபிள் ஆதாரங்கள்:**

i) மரியாள் தேவதூதன் உரையாடல்

ii) யோசேப்பு தேவதூதன் உரையாடல்

iii) இயேசுவின் பிறப்பு பட்டியல்

iv) மரியாளிடம் தேவன் காண்பித்த கிருபை

v) எலிசபெத்தின் துதி

vi) மரியாளின் துதி

vii) தூதர்களின் துதி

viii) தூதனின் கட்டளை

சிலர் மரியாளிடம் ஒரு Biological accident நடந்திருக்கக்கூடும் என வாதிடுகின்றனர். ஆனால் சரித்திரத்தில் இதுவரை எந்த பெண்ணிடமும் சுய இனப்பெருக்கம் நடந்த சான்றுகள் இல்லை. அப்படியே நடந்திருந்தாலும் பெண் குழந்தைதான் பிறந்திருக்க வேண்டும். ஏனென்றால் பிறக்கப்போகும் குழந்தை ஆணா அல்லது பெண்ணா என்பதை தீர்மானிப்பது ஆணின் விந்தணு ஆகும். ஆகையால் எந்த விபத்தும் நடக்க முடியாது.

சிலர் இது இதிகாசங்களோடு தொடர்புடையது என கூறுகின்றனர். ஆனால் கன்னிப்பிறப்பு சார்ந்த வேறு இதிகாசங்கள் கற்பனைகளாகவும் சரித்திர ஆதாரம் அற்றதாகவும் உள்ளது.

ஆகவே இயேசு கிறிஸ்துவின் கன்னிப்பிறப்பு, பைபிள், சரித்திரம் மற்றும் விஞ்ஞான அடிப்படையில் மறுக்க இயலாதது ஆகும்.

### 06. இயேசு கிறிஸ்துவின் கன்னிப்பிறப்பு உபதேசத்தின் முக்கியத்துவம்

i) இயேசுவின் கன்னிப்பிறப்பு சுவிசேஷ நூல்களின் உண்மைத்தன்மையோடு தொடர்புடையது.

ii) இயேசுவின் கன்னிப்பிறப்பு அவரின் பாவமில்லா தன்மையோடு தொடர்புடையது.

iii) இயேசுவின் கன்னிப்பிறப்பு அவரின் மாமிச வெளிப்பாட்டிற்கான (Incarmation) சரியான வாசலாய் அமைந்துள்ளது.

iv) இயேசுவின் கன்னிப்பிறப்பு இயேசு மற்றும் மரியாள் மீது எந்த களங்கமும் வராமல் பாதுகாக்கின்றது.

v) இயேசுவின் கன்னிப்பிறப்பு இயேசுவின் முதலாம் வருகையின் பிறப்பு முதல் பரமேறுதல் வரையுள்ள அனைத்தும் தன்னிகரற்ற தன்மை உடையதாய் அமைய வழிவகை செய்கிறது.

**07. நாமும் இயேசு கிறிஸ்துவின் கன்னிப்பிறப்பும்**

கடைசியாக, நாம் ஏன் இயேசுவின் கன்னிப்பிறப்பைக் குறித்த சரியான விசுவாசம் கொள்ள வேண்டும் என்பதை தெளிவாக அறிந்திருப்பது நல்லது. தேவன் இயேசுவின் கன்னிப்பிறப்பை இப்படித்தான் நிறைவேற்றியுள்ளார். ஆகவே நாம் அதை விசுவாசிக்க கடமைப்பட்டிருக்கிறோம். இயேசுவின் கன்னிப்பிறப்பை நாம் அறிக்கையிடுவதால், அவர் தனது பிறப்பிற்கு முன்னே நித்தியமான தேவனாக இருந்தார் என்பதை நாம் சாட்சியிடுகிறோம். (ஏசா.9:6; மீகா. 5:2). கன்னிப்பிறப்பின் மூலமாக தேவன் மாம்சத்தில் வெளிப்பட்டார் (தீமோ.3:16) கன்னிப்பிறப்பின் மூலமாகவே, இயேசு தமது மாம்ச வெளிப்பாட்டை நிறைவேற்றி அதன் மூலமாக நமது பாவங்களுக்காக வேத வாக்கியங்களின் படி மரித்து, அடக்கம் பண்ணப்பட்டு, மூன்றாம் நாளில் உயிர்த்தெழுந்தார் (1 கொரி. 15:1–4) இதுவே சுவிசேஷம். மட்டுமல்ல கன்னிப்பிறப்பின் மூலமாக இயேசு தந்தருளப்பட்டதாலே பிதாவின் அன்பு வெளிப்பட்டது. (யோ.3:16) ஆகவே, இயேசுவின் பிறப்பை கொண்டாடுகிற நாம் கர்த்தர் நம் மீட்புக்காய் வெளிப்பட்ட விதத்தை எண்ணி துதிப்போம், பறைசாற்றுவோம், மாரநாதா!

தேவனாலே கூடாத காரியம் ஒன்றுமில்லை (லூக்.1:37)

**–S. மோசஸ் ராஜ்**

---

## புதுநம்பிக்கை கிரீடம்



2018–ஆம் ஆண்டு நமது பத்திரிகையில் வெளிவந்த வேதாகம கேள்விகளுக்கு சரியான பதில் எழுதியவர்களுக்கு பரிசு வழங்கும் விழா நாகர்கோவிலில் நடைபெறவுள்ளது. போட்டியில் கலந்து கொண்டவர்கள் இவ்விழாவில் பங்கு பெற்று பரிசுகள் பெற்றுக்கொள்ளும்படி அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

நாள்: **3–12–2018,** திங்கட்கிழமை. நேரம்: மாலை **4.00** மணி
இடம்: **23,** ஈஸ்ட் ஆப் தெரு, **(East off Street)** நாகர்கோவில்

# ஆளப்பிறந்தவனே சிந்தனை செய்!

அண்ணே! வாசித்தால் மட்டும் தலைவனாகி விட முடியுமான்னு நான் கேட்ட கேள்விக்கு நீங்கள் இனனும் பதில் சொல்லவில்லை. மறந்திட்டீங்களா?

மறக்கலை தம்பி, சொல்கிறேன் கேள்!

சொல்லுங்கண்ணே!

வாசிக்கும் பழக்கம் தலைவனாக மாறுவதின் முதல் நிலை எனில், ‘‘சிந்தனை செய்தல்’’ தலைவனாக மாறுவதின் இரண்டாம் நிலை.

கொஞ்சம் கூட தெளிவாக சொல்லுங்கண்ணே!

தம்பி, நாம் அன்றாடம் படிக்கிற பத்திரிகைகள், புத்தகங்களில் வருகிற தகவல்களில் வரும் நல்ல தகவல்களை குறித்து சிந்திக்க வேண்டும்.

அண்ணே, எப்படி சிந்திக்க வேண்டும்?

நாம் படித்த தகவல் உண்மைதானா? சாத்தியமானதா? இப்படி நடக்க வாய்ப்புள்ளதா? போன்ற கேள்விகளை கேட்பதால் மனம் அந்த செய்தி அல்லது தகவல் குறித்து சிந்திக்க ஆரம்பிக்கிறது.

கேள்விகள் மட்டும் கேட்டால் போதுமா?

போதாது! கேட்ட கேள்விக்குரிய பதில் கிடைக்கவில்லை எனில், அதற்குரிய கூடுதல் தகவல்களை தேட வேண்டும். தேவையானால் அது குறித்த வேறு புத்தகங்களை தேடி படிக்க வேண்டும். இப்படி செய்து வந்தால் நமது சிந்தனை வளம் பெறும்.

நமக்கு ஆர்வமான துறை சார்ந்த புத்தகங்களையும் படிக்க வேண்டும். அத்துடன் தொடர்புடைய பிற துறை சார்ந்த புத்தகங்களையும் படிக்கலாம்.

உதாரணமாக வானியல் சார்ந்து ஆர்வமுள்ளவர்கள் புவியியல் துறை புத்தகங்களைப் படிக்கலாம். இரண்டும் தொடர்புடையது. இப்படி செய்து வந்தால் உங்கள் அறிவும் சிந்தனை திறனும் வளரும்.

சரியண்ணே! நல்ல சிந்தனை வளர எங்கிருந்து ஆரம்பிப்பது? அதைச் சொன்னால் நல்லது!

நல்ல கேள்வி, பிலிப்பியர் 4:8ஐ படி! ‘‘கடைசியாக, சகோதரரே,

உண்மையுள்ளவைகளெவைகளோ, ஒழுக்கமுள்ளவைகளெவைகளோ, நீதியுள்ளவைகளெவைகளோ, கற்புள்ளவைகளெவைகளோ, அன்புள்ளவைகளெவைகளோ, நற்கீர்த்தியுள்ளவைகளெவைகளோ, புண்ணியம் எதுவோ, புகழ் எதுவோ அவைகளையே சிந்தித்துக் கொண்டிருங்கள்.

அருமையான வசனம்! இதன்படி நல்லதை சிந்திக்க முயற்சிக்கிறேன்.

நல்லது தம்பி மீண்டும் சந்திப்போம்!

(தொடரும்) **– எச்.ஆர்.கே**

---

# கம்பியூட்டர் தேவை



நமது மிஷனெரி பணிகள் தொடர்ந்து வளர்ந்து வருவதால், இப்பணிகளை மேலும் விரைவாக செய்யவும், நிர்வாக பணிகளை மேலும் செவ்வைப்படுத்தவும், நமது அலுவலகத்திற்கு ஒரு கம்யூபிட்டர் தேவைப்படுகிறது. இதற்காக ஜெபித்துக்கொள்ளுங்கள்

**தொடர்பு: S. மோசஸ்ராஜ் – 6369127780**

---

# பாடல் மற்றும் ஆவிக்குரிய புத்தகம்

சபை ஆராதனை, வீட்டு ஜெபக்கூட்டம், தனி ஜெபத்தில் தேவனை பாடி துதிக்க பக்தி பரவசம், இனிமையான பாடல்களின் தொகுப்பு. **500–**க்கும் மேற்பட்ட பழைய, புதிய பாடல்கள் மலையாள, ஆங்கில பாடல்களும் உண்டு. பாடல் புத்தகத்தின் விலை ரூ. **70/–**

**எமது இதர வெளியீடுகள்**

யூத பண்பாடும் வசன விளக்கமும் – ரூ. **30/–**

சபை உடைதலை தடுக்கும் வழிகள் – ரூ. **120/–**

சபை நிதி பெருகும் வழிகள் – ரூ. **70/–**

குறிப்பு:– அனைத்து கிறிஸ்தவ புத்தக நிலையங்களிலும் கிடைக்கும்

தொடர்பு எண்: **9442935233**

# ஸ்திரீகளுக்குள்ளே ஆசீர்வதிக்கப்பட்டவள் "மரியாள்"

தாவீதின் குமாரனாகிய நாத்தானின் வம்சத்தில் வந்த ஏலியின் குமாரத்திதான் மரியாள். அவள் ஸ்திரீகளுக்குள் ஆசீர்வதிக்கப்பட்டவள் என்று அழைக்கப்பட்டாள். அவள் யோசேப்பு என்னும் புருஷனுக்கு நியமிக்கப்பட்டிருந்தாள். எபிரேய வழக்கத்தின்படி அவர்களின் திருமணத்திற்கான சட்ட ரீதியான ஒப்பந்த முறைகள் முடிவு பெற்றிருந்தன. இனி இந்த உறவு முறிக்கப்பட முடியாது. அவர்கள் திருமண வாழ்வில் கூடிவருமுன்பே தேவனால் அனுப்பப்பட்ட காபிரியேல் என்னும் தூதன் அவள் வீட்டிற்கு வந்து அவளை வாழ்த்தி, பரிசுத்த ஆவியானவர் உன்மேல் வந்து நிழலிடும்போது நீ கர்ப்பவதியாகி ஒரு குமாரனைப் பெறுவாய். அவருக்கு இயேசு என்று பெயரிடுவாயாக என்றான். அப்படியே இயேசு பிறந்தார். (மத்.1:18–21)

தேவன் மனுக்குலத்தின் பாவத்திற்கு பரிகாரமாகத் தமது சொந்த குமாரனையே உலகத்திற்கு அனுப்ப தீர்மானித்த போது அவரை ஒரு கன்னியின் வயிற்றில், ஸ்திரீயின் வித்தாகப் பிறக்க வைக்க வேண்டும் என்பது அவரது திட்டம். (ஏசாயா.7:14) அந்த நாட்களில் மேசியா என்னும் இரட்சகர் தங்கள் வயிற்றில் பிறக்க இஸ்ரவேலில் அநேக கன்னியர்கள் காத்திருந்தார்கள் என்று வரலாற்று ஆசிரியர்கள் கூறுகின்றனர்.

தேவனால் அனுப்பப்பட்ட தூதன் மரியாளின் வீட்டில் வந்த உடனே அவன், "கிருபை பெற்றவளே வாழ்க" என்றான். " (லூக்கா. 1:28) மரியாள் வேதாகமத்தின் எல்லா இடத்திலும் தாழ்மையுடன் நடந்து கொண்டதையே பார்க்கிறோம். இயேசு கிறிஸ்து பிறந்தபோது சாஸ்திரிகள் வந்து யூதருக்கு ராஜாவை பணிந்து கொள்ள வந்தோம் என்று கூறி காணிக்கை படைத்தார்கள்.மேய்ப்பர்கள் வந்து "தூதர் எங்களிடம் இரட்சகர் பிறந்திருக்கிறார்" என்று அறிவித்தார்கள் என்றார்கள். மரியாளோ இநத சங்கதிகளையெல்லாம் தன் இருதயத்தில் வைத்து சிந்தனை பண்ணினாள். (லூக்கா 2:19) நம்மிடையே அநேகர் இரகசியங்களை மனதில் வைக்க அறியாதவர்களாக இருக்கிறார்கள்.

சிலுவையில் இயேசு மரிக்கும் தருவாயில் தன் சீஷனிடம்

மரியாளை ஒப்படைத்தார். அந்த துக்கமான வேளையிலும் அதை மரியாள் ஏற்றுக்கொண்டாள். ஆதிசபையின் முதல் விசுவாசிகள் கூட்டமான 120 பேரில் இயேசுவின் தாயும் ஒருவர் (அப்.1:14) ஒரு மனதுடன் ஜெபத்திலும் வேண்டுதலிலும் தரித்திருந்து தேவ பலனைப் பெற்று உலகத்தை மாற்றிய கூட்டம் இதுதான். மரியாளின் பங்கு அந்த கூட்டத்தாருக்கு எத்தனை ஊக்கத்தை கொடுத்திருக்கும். மரியாளின் வாழ்வின் நற்குணங்கள் நமக்கு, நம்முடைய வாழ்கைக்கு மாதிரியாக இருக்க வேண்டும்.

**– சகோதரி. சகாயராணி ஹென்சிலின்**

# பள்ளி, கல்லூரி, சபை – இளையோர் பணி



பள்ளி மாணவர் மற்றும் இளைஞர் மத்தியில் இயேசு கிறிஸ்துவின் அன்பையும், பரிசுத்த வாழ்வின் சிறப்பையும் குறித்து அறிவிக்க நமது புது நம்பிக்கை இளைஞர் ஊழியம் செயல்பட்டு வருகிறது. தங்கள் சபை, பள்ளி, கல்லூரிகளில் இளைஞர் மத்தியில் இயேசுவை அறிவிக்க எங்களை தொடர்பு கொள்ளவும்.

**தொடர்பு: Dr. C. பால் பென்னட் சிங்– 9443155120**
**S. மோசஸ்ராஜ் – 6369127780**



# மருத்துவ குறிப்பு
# கிருணிப் பழம்

கோடைகாலத்தில் அதிகமாக கிடைக்கும் இப்பழம், கோடையின் வெப்பம் தணிக்க பானம் தயாரிக்க உதவுகிறது. இதில் புரதம் மற்றும் கொழுப்பு சத்து உள்ளது. சருமத்தில் எண்ணெய் பசை குறைந்து தோல் வறண்டு போகும் குறைபாடு உள்ளவர்கள் கொழுப்பு நிறைந்த கிருணிப்பழ பானம் அருந்துவது பயன்தரும். இப்பழத்தை சருமம் மற்றும் முகத்தில் தடவினால் முகம் பொலிவு பெறும். இப்பழத்திலுள்ள பொட்டாசியம் சத்து இரத்த அழுத்தத்தை கட்டுக்குள் வைக்க உதவும்.

**–எச்.ஆர்.கே.**

## நன்கொடை அனுப்புவோர் கவனத்திற்கு

நன்கொடை மற்றும் காணிக்கை அனுப்புவோரும், வங்கியில் காணிக்கை செலுத்துவோரும் தயவு செய்து தங்கள் பெயர் மற்றும் முழு முகவரியை எமக்கு தெரிவிக்கவும். உரிய ரசீது கொடுக்க அது உதவிகரமாக அமையும். தங்கள் உதவிக்கும் ஒத்துழைப்புக்கும் நன்றி.

**பெயர் :** Newhope Mission (நியூஹோப் மிஷன்)
**எமது வங்கி கணக்கு எண் : 2113 01000 20536**
**வங்கி : தி பெடரல் பேங்க் லிட்** (The Federal Bank Ltd.)
**கிளை : பாலூர்** (Paloor)
IFSC Code : FDRL 0002113

நமது மிஷன் பணிக்களங்களை நேரில் பார்வையிட்டு ஜெபிக்க உங்களை அன்புடன் அழைக்கிறோம்.
தொடர்பு எண் : **9443155120** & **9442935233**

## பணிக்கள சந்திப்பு

நமது மிஷனெரி பணிக்களங்களில் நடைபெறும் பணிகளை நேரடியாக பார்வையிட்டு அங்கு பணிபுரியும் மிஷன் பணியாளர்கள் மற்றும் அவர்கள் குடும்பத்தினரை சந்திக்கவும் விருப்பமுடையவர்களாய் இருக்கிறீர்களா? அப்படியானால் உங்கள் விருப்பத்திற்கு உறுதுணையாக நாங்கள் இருக்கின்றோம். நமது குழுவினர் வடஇந்திய மிஷனெரி பணிகளை பார்வையிட செல்லும்போது நீங்களும் எங்களுடன் இணைந்து கொள்ளலாம். உங்கள் வருகை வட இந்தியாவில் உள்ள புதிய கிறிஸ்தவ நண்பர்கள் யாவரையும் உற்சாகப்படுத்துவதாக அமையும். பணிக்களங்களை நேரில் சந்திக்க விரும்புவோர் தொடர்பு கொள்ளவும்.

**குறிப்பு:**

ஆயுள்சந்தா ரூ.2000/– செலுத்துபவர்களுக்கு புது நம்பிக்கை வெளியீடுகள் அனைத்தும் இலவசமாக அனுப்பித் தரப்படும்.

ஜூலை - செப்டம்பர்-2018 இதழ் போட்டிக்கான சரியான விடை எழுதியவர்கள்

**1. Mrs. ஸ்டெல்லா அலெக்ஸ்,**
**2. Mrs. பாக்கியம் குமார்,**
**3. Mrs. செல்வி செல்வராஜ்,**
**4. Mrs. ஸ்டெல்லா ஜெயபால்,**
**5. Mrs. பொன்னேசம் ராஜா,**
**6. Mrs. பமிலா எட்வின்,**
**7. Mrs. லைலா பென்னட்,**
**8. Mrs. சாந்தி சாலமன்**
**9. Mrs. பிரின்சி செல்வம்,**
**10. Mrs. ஷீபா மோகன்,**
**11. Mrs. பியூலா ஜான்சன்,**
**12. Mrs. லின்சி யூஜின்,**
**13. Mrs. பேபி கிறிஸ்டோபர்.**

"இடைவிடாமல் ஜெபம் பண்ணுங்கள் ....'' (1 தெச.5:17)

# ஜெப விண்ணப்ப குறிப்புகள்

☞ ஆந்திர மாநிலத்தில் கட்டப்பட்டு வரும் சபையின் தேவைகள் சந்திக்கப்பட ஜெபிப்போம்.

☞ தெலுங்கானா மாநிலத்தின், ஐதராபாத்தில் தீமோத்தி அவர்கள் பணிக்களத்தில் கட்டப்பட்டு வரும சபை மேற்கூரை காங்கிரீட் இட்டபின் நிதி இல்லாமல் நிறுத்தப்பட்டுள்ளது. தொடர்ந்து கட்டப்பட தேவையான நிதிக்காக ஜெபியுங்கள்.

☞ சகோ. ரமேஷ் அவர்களின் தொழிலில் வரவேண்டிய சம்பள பாக்கிகள் தடைகள் நீங்கி கிடைக்க ஜெபியுங்கள்.

☞ மத்திய பிரதேச சபை கட்டுமான பணிகளுக்காக ஜெபியுங்கள்.

☞ கடன் பிரச்சனையில் இருக்கும் சகோதரி. செல்வி அவர்களின் கடன்கள் நீங்கும்படி ஜெபிப்போம்.

---

# வேதாகம வினா – விடை போட்டி – 2018

வேதாகம பகுதி : **– லேவியராகமம் – எண்ணாகமம்**

1. இரத்தம் புசிக்கக்கூடாது என எந்த அதிகாரங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது ?
2. வார்ப்பிக்கப்பட்ட தெய்வங்களை உண்டாக்கக்கூடாது என சொன்னது யார் ?
3. தராசும், படிக்கல்லும், மரக்காலும் எப்படிப்பட்டவைகளாய் இருக்க வேண்டும் ?
4. தன்னை தாழ்மைப் படுத்தாத ஜனம் எப்படி போவார்கள் ?
5. ஆற்றலரி என்ற வார்த்தை எந்த வசனத்தில் உள்ளது ?
6. முதலாம் நாளில் காணிக்கை செலுத்தியவன் யார் ? எந்த கோத்திரம் ?
7. சமாதான பலிகளாக செலுத்தப்பட்ட காணிக்கை பொருட்கள் ?
8 ஒரே கட்டளை யார் யாருக்கு கொடுக்கப்பட்டது ?
9. மன்னாவின் நிறம் என்ன ?
10. ஆரோன் எந்த மலையில் மரணமடைந்தான் ?

**விடைகளை அனுப்ப வேண்டிய முகவரி**
**S. Vasantha Nesam,** 23- Eastaff Street, Nagercoil - 629 001
Cell : 9789183072

விடைகள் வந்துசேர வேண்டிய கடைசி நாள் : **நவம்பர் 30, 2018**

மலர்–2 இதழ்–3 ன் (லேவியராகமம்–எண்ணாகமம்) விடைகளுக்கான வசன பகுதி

1. லேவி. 7:26, 17:12
2. லேவி. 19:4,
3. லேவி. 19:36,
4. லேவி. 23:29,
5. லேவி. 23:40,
6. எண் 7:12,
7. எண் 7:88,
8. எண் 9:14,
9. எண் 11:7,
10. எண் 33:39,

# முன்னேற்ற பணியாளர்கள் தேவை

மிஷன் பணிக்களங்களில் பணியாற்றும் மிஷனரிகளுக்கு **புதுநம்பிக்கை** மிஷன் பல்வேறு வகைகளில் உதவி செய்து வருகிறது. மிஷனரிகளுக்கு உதவி செய்யும் மிஷனரி பணியில் ஆர்வமுள்ள தன்னார்வ முன்னேற்ற பணியாளர்கள் தேவை. தாங்கள் வாழ்ந்து வரும் பகுதியிலேயே இப்பணிகளை செய்யலாம். மிஷனரி பணியில் ஆர்வமுள்ள கிறிஸ்தவ சகோதரர் / சகோதரிகள் இப்பணிகளை ஜெபத்துடன் செய்யலாம். (நேரில் வர விரும்புவோர் முன் நேரம் குறித்து வரவும்)

எமது அலுவலக முகவரி:
**புது நம்பிக்கை மிஷன்**
75/33, ஐசக் தெரு, நாகர்கோவில் - 629 001.
தொடர்பு எண் : **9442935233**

## ஜெப மற்றும் குடும்ப ஆலோசனை

கிறிஸ்துவுக்குள் அன்பானவர்களே!

உங்கள் ஜெபத்தேவைகள் மற்றும் குடும்பம், வேதாகமம் குறித்த ஆலோசனைகளுக்கு எங்களை தொடர்பு கொள்ளவும். ஜெபித்து ஆலோசனை கூறி உதவ ஆயத்தமாயிருக்கிறோம்.

**தொடர்பு எண் : 9442935233**

எமது நிகழ்ச்சிகளை யு-டியூபில் (You Tube) பார்த்து ஆசீர்வாதம் பெறுங்கள்,
லிங்க் முகவரி: NEWHOPE MISSION

# அஞ்சல் வழி வேதாகம பயிற்சி

**வேதாகம கல்லூரி படிப்பு மையங்கள் :**

நாகர்கோவில், மார்த்தாண்டம், இரணியல், திருநெல்வேலி, கருங்கல், ஈரோடு, திருப்பூர், திருவண்ணாமலை.

இறையியல் மற்றும் வேதாகமத்தை முறைப்படி படிக்க ஓர் அரிய வாய்ப்பு. தேவனுடைய வார்த்தை தெளிவாக கற்று தேற உதவும் வகையில் கீழ்கண்ட பயிற்சிகள் நேரடி வகுப்பு மற்றும் அஞ்சல் வழியாக வழங்கப்பட்டு வருகிறது. ஆர்வமுள்ள அனைவரும் படிக்கலாம்.

| படிப்பு | காலம் | தகுதி |
|---|---|---|
| Bachelor of Theology | 3 ஆண்டுகள் | +2 தேர்ச்சி |
| Bachelor of Bible Studies | 2 ஆண்டுகள் | தமிழ் படிக்க தெரிந்தவர்கள் |
| Master of Divinity | 2 ஆண்டுகள் | B.Th |
| Master of Ministry | 2 ஆண்டுகள் | B.B.S |
| Master of Theology | 2 ஆண்டுகள் | M.Div. |
| Diploma in Biblical Hebrew | 2 ஆண்டுகள் | தமிழ் தெரிந்தவர்கள் |



ஆர்வமுள்ள கிறிஸ்தவ ஆண் / பெண் இருபாலரும் படிக்கலாம். தமிழ் மற்றும் ஆங்கில வழியில் படிக்க வசதியுண்டு. குறைந்த கட்டணம் தரமான பயிற்சி.

மேலும் விபரங்களுக்கு:–


**Director**
**CALS - Bible Course**
Harris House,
8/69-c, Manvilagam, Reethapuram P.O.
K.K.Dist - 629 159
Cell : 9442935233





சாலை விபத்தில
படுகாயம் அடைந்து
சிகிட்சை பெற்று
வரும் மத்திய
பிரதேச மாநில
மிஷனெரி மற்றும்
குழந்தைகள்

இவர்களுக்காக
ஜெபித்துக்
கொள்ளுங்கள்



ஆந்திர மாநில சபை விசுவாசிகளின் கூடுகை
மற்றும் ஆராதனை



ஆந்திரா மாநில ஞானஸ்நானம்பெற்ற புது விசுவாசிகள்

எமது ஊழியங்களுக்கு ஜெபித்து நன்கொடை வழங்கி உதவி செய்த
வாசகர் குடும்பங்கள், சபைகள் மற்றும் நண்பர்கள் அனைவருக்கும்
புதுநம்பிக்கை மிஷன் நிர்வாகிகள், பணியாளர்கள் மற்றும் புதுநம்பிக்கை
பத்திரிகை ஆசிரியர் குழு சார்பாக எமது இதயம் நிறைந்த
இனிய கிறிஸ்மஸ் மற்றும் 2019 புத்தாண்டு வாழ்த்துக்கள்.

கர்த்தர்தாமே சமாதானம் அருளி உங்களை காக்கக்கடவர்.

Merry Christmas




Editor : S. Moses Raj, (Mobile : 7502071054),
Published by : New Hope Mission,
75/33, Isaac St. Nagercoil - 629 001.
Contact : 9442935233
e-mail: newhopebharat@gmail.com
website : www.newhopebharat.org
Printed at : Latha Press, 9791659601